[12th February 1959

*Murder cases*

* 251 *Q.*—SRI K. SATTANATHA KARAYALAR : Will the Hon. the Minister for Home be pleased to state—

(*a*) the number of cases of murders—

(i) committed;

(ii) investigated and prosecuted; and

(iii) ending in conviction

in the State in 1958;

(*b*) the average rate of expense per murder case for its investigation in the said period; and

(*c*) the maximum spent to investigate a murder case in the same period?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : (*a*) (i) 703.

(ii) 578.

(iii) 244.

(*b*) About Rs. 105.

(*c*) Rs. 2,000.

SRI K. SATTANATHA KARAYALAR : கிட்டத்தட்ட 700-க்கும் அதிகமான கொலைவழக்குகளில் நடவடிக்கைகள் எடுத்து பிராசிக்யூஷன் செய்ததில், கன்விக்ஷனில் முடிந்தது 244 என்று இருக்கிறது. இப்படிப் பல வழக்குகளில் கன்விக்ஷன் வராமல் போவதற்குக் காரணம் இன்வெஸ்டிகேஷன் சரியாகச் செய்யவில்லையென்று நீதிபதிகள் கோர்ட்டிலேயே கூறியிருக்கிறார்களா ? அதன் மீது என்ன நடவடிக்கைகள் எடுத்திருக்கிறார்கள் ? இந்த 'மாதிரி வராமல் தடுக்க அரசாங்கம் என்ன நடவடிக்கைகள் எடுத்துக் கொண்டிருக்கிறார்கள்.

THE HON. SRI M. BHAKTAVATSALAM : பொதுவாக இன்வெஸ்டிகேஷன் சரியாக நடைபெறவில்லை என்று கூற முடியாது. ஒன்றிரண்டு வழக்குகளில் நீதிபதிகள் அந்த மாதிரிக் கூறியிருக்கிறார்கள். எங்கெங்கெல்லாம் குறிப்பிட்டிருக்கிறார்களோ அங்கெல்லாம் கவனிக்கப் பட்டு வருகிறது.

SRI S. LAZAR : How does the number of murders compare with the previous year and with the All-India figures?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : Sir, I may say that compared with the previous year, the number of murders is less, only comparatively. I do not have statistics about the All-India figures. I may tell the hon. Member that compared with world statistics our country stands the highest, takes the first place in point of murders.

SRI A. A. RASHEED : How many of the murdered and murderers were women and were there any boy-murderers? (Laughter.)

THE HON. SRI M. BHAKTAVATSALAM : I may tell the hon Member at once that there are very few murderers.

12th February 1959]

SRI K. SATTANATHA KARAYALAR : ஸார், கன்விக்ஷனிலே முடியாமல் இருக்கக்கூடிய வழக்குகளில் போலீஸ் தரப்பிலே கூறக்கூடிய காரணங்கள் என்ன ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : முக்கியமாகக் கொலை செய்கிறவர்கள் தகுந்த சாட்சியம் வைத்துக்கொண்டு செய்வதில்லை (சிரிப்பு). அப்படி போலீஸார் இதைப்பற்றிப் பரிசீலனை செய்து, ஆராய்ந்து சாட்சியம் காட்டினாலும், நீதிபதிகள் ஏற்றுக் கொள்ளாமல் இருக்கலாம். ஒரு நீதிபதி ஏற்றுக்கொள்வதை, மற்றொரு நீதிபதி ஏற்றுக்கொள்ள மறுக்கிறார்.

SRI P. G. MANICKAM : ஸார், எந்த ஜில்லாவில் கொலை அதிகமாக இருக்கிறது ? எந்த ஜில்லாவில் குறைவாக இருக்கிறது ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : இதில் முதல் ஸ்தானம் கோயம்புத்தூர் ஜில்லாவிற்கு (சிரிப்பு). கடைசி ஸ்தானம் நீலகிரி ஜில்லாவிற்கு. நீலகிரி ஜில்லா மிகவும் சின்னது. அதற்கடுத்தபடியாக கடைசி ஸ்தானம் செங்கற்பட்டு ஜில்லாவிற்கு (சிரிப்பு).

SRI M. JAGANNATHAN : Sir, if the Coimbatore district is leading the other districts in murderous instincts and criminal propensities, what is the action taken by Government to minimise that in Coimbatore ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : I do not admit, Sir, that Coimbatore leads in criminal propensities.

*Chinese method of cultivation*

* 252 *Q.*—SRI K. SATTANATHA KARAYALAR : Will the Hon. the Minister for Home be pleased to state—

(*a*) whether there is a proposal to try intensive cultivation of crops by the Chinese method in some parts of the State; and

(*b*) if so, whether there is any proposal to send persons from this State to China to make an on the spot study?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : (*a*) No, Sir.

(*b*) Does not arise.

SRI K. SATTANATHA KARAYALAR : ஸார், இந்த சைனீஸ் மெதேடில் 25,000 பவுண்டுக்கும் அதிகமாக ஒரு ஏக்கரில் உற்பத்தி செய்யப்படுவது உண்மைதானா ? இதற்கும் ஜப்பானீஸ் மெதேடுக்கும் உள்ள வித்தியாசம் என்ன ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : ஜப்பானுக்கும் சைனாவுக்கும் போட்டியாக இருக்கலாம். பிரசாரமாக இருக்கலாம். இப்போது ஜப்பானிய முறையைக் கொஞ்சம் மாற்றி இங்கே அனுசரித்து வருகிறோம். பயிர் அடர்த்தியாக இருக்கவேண்டும் என்று இப்போது அனுசரிக்கப்பட்டு வருகிறது.

*" Atom Bomb " crackers*

* 253 *Q.*—SRI A. A. RASHEED : Will the Hon. the Minister for Home be pleased to state—

(*a*) whether the Government are aware that the " Atom Bomb " crackers were exploded in streets and public places during the last Deepavali day in the City; and